# यमुनाष्टकम्

## யமுனாஷ்டகம்

(1)

मुरारिकायकालिमाललामवारिधारिणी
तृणीकृतत्रिविष्टपा त्रिलोकशोकहारिणी ।
मनोनुकूल कूलकुञ्जपुञ्जधूतदुर्मदा
धुनोतु मनोमलं कलिन्दनन्दिनी सदा ॥

முராரிகாய காலிமாலலாம வாரி தாரிணீ
த்ருணீக்ருதத்ரி விஷ்டபா த்ரிலோக
சோகஹாரிணீ!
மனோனுகூல கூல குஞ்ஜபுஞ்ஜ தூததுர்மதா
தனோது நோ மனோமலம் கலிந்த நந்தினீ ஸதா!!

விஷ்ணுவின் உடல் நிற மொத்த தண்ணீர் கொண்டதும், புல்லெனச் செய்த மூவுலகையுடையதும், அனைவரது பாபங்களைப்போக்குவதும் மனதிற்கிசைந்த கரையோர நந்தவனங்கள் மூலம் கெட்டவரைக்களைவதுமாகிய கலிந்த மலைத்தோன்றலான யமுனை எங்கள் மனதை தூய்மையாக்கட்டும்.

(2)

मलापहारिवारिपूरभूरिमण्डितामृता
भृशं प्रपातकप्रभञ्जनातिपण्डितानिशम् ।
सुनन्दनन्दनाङ्गसङ्गरागरञ्जिता हिता
धुनोतु मनोमलं कलिन्दनन्दिनी सदा ॥

மலாபஹாரி வாரிபூர பூரி மண்டி தாம்ருதா
ப்ருசம் ப்ரபாதக ப்ரபஞ்ஜனாதி பண்டிதாநிசம்!
ஸுனந்த நந்தனாங்கஸங்க ராகரஞ்ஜிதா ஹிதா
துனோது நோ மனோமலம் கலிந்த நந்தினீஸதா!!

பாபத்தை நீக்கும் தண்ணீர்ப்ரவாஹத்தால் அம்ருதத்தைப்போன்றதும், நீர்விழ்ச்சி காற்றால் மிகவும் தேர்ந்ததும், ஸுநந்தன் மகனின் உடற்பூச்சு கலந்து மிளிர்வதும், ஹிதமானது மான யமுனை நம் மனோமலத்தை நீக்கட்டும்.

(3)

लसत्तरङ्गसङ्गधूतभूत – जात पातका
नवीनमाधुरी धुरीण भक्तजातचातका ।
तटान्तवासदासहंससंवृताऽह्नि कामदा
धुनोतु मनोमलं कलिन्दनन्दिनी सदा ॥

லஸத்தரங்கஸங்க தூதபூத ஜாதபாதகா
நவீன மாதுரீ தூரீணபக்தஜாத சாதகா!
தடாந்த வாஸதாஸஹம்ஸ ஸம்வ்ருதாஹ்நி காமதா
துநோது நோ மனோமலம் கலிந்த நந்தினீ ஸதா!!

மிளிரும் அலைகள்பட்டு பிராணிகளின் பாபங்கள் அகலுகின்றன. பக்தர்களாகிய சாதகப்பறவைகள் புதுப்புனல் இனிமையில் திளைக்கின்றன. தடாந்தங்களில் வசிக்கும் தாஸர்களாகிய ஹம்ஸங்கள் சூழப்பெற்று, அனைவரது விருப்பங்களையும் நிறைவேற்றுகிறது. அப்படிப்பட்ட யமுனை எமது பாபங்களை போக்கட்டும்.

(4)

विहाररासखेदभेदधीरधीरमारुता
गता गिरामगोचरे यदीयनीरचारुता ।
प्रवाह साहचर्यपूतमेदिनीनदीनदा
धुनोतु मनोमलं कलिन्दनन्दिनी सदा ॥

விஹார ராஸகேத பேத தீர தீரமாருதா
கதா கிராமகோசரே யதீய நீரசாருதா!
ப்ரவாஹஸாஹசர்ய பூதமேதினீ நதீநதா
துநோது நோ மனோமலம் கலிந்த நந்தினீஸதா!!

ராஸக்ரீடை முதலிய விளையாட்டால் ஏற்பட்ட களைப்பைப்போக்கும் திறன் கொண்டது யமுனையின் கரைக்காற்று. அதன் தண்ணீரின் இனிமை சொல்லமுடியாதது. மேலும் யமுனை ப்ரவாஹச் சேர்க்கையால் அருகிலுள்ள இடங்களும் நதிகளும், நதங்களுமே தூய்மை பெறுகின்றன. அப்படிப்பட்ட யமுனை நமது மனவழுக்கை களையட்டும்.

(5)

तरङ्गसङ्गसैकतान्तराञ्चिता सदाऽसिता
शरन्निशाकरांशुमञ्जुमञ्जरीसभाजिता ।
भवार्चनाप्रचारणाम्बुनाऽधुना विशारदा
धुनोतु मनोमलं कलिन्दनन्दिनी सदा ॥

தரங்க ஸங்கஸைகதாந்தராஞ்சிதா ஸதா꠰ஸிதா
சரந்நிசாகராம்சுமஞ்ஜுமஞ்ஜரீஸபாஜிதா!
பவார்சன ப்ரசாரணாம் புனா꠰துநா விசாரதா
துநோது நோ மனோமலம் கலிந்த நந்தினீ ஸதா!!

அலைமோதும் மணல் திட்டுகள் ஒரு புறம் திகழ, கருநீல நிறம் கொண்டு விளங்குகிறது யமுனை. சரத் கால சந்திர கிரணங்கள் பட்டு மொக்கவிழ்ந்த பூக்கொத்துகளாலும், பரமேச்வரன் பூஜைக்குகந்த தண்ணீராலும் திறன் கொண்ட யமுனை நமது மனவழுக்கை போக்கட்டும்.

(6)

जलान्तकेलिकारिचारुराधिकाङ्गरागिणी
स्वभर्तुरन्यदुर्लभाङ्गतां गतांशभागिनी ।
स्वदत्तसुप्तसप्तसिन्धुभेदनातिकोविदा
धुनोतु मनोमलं कलिन्दनन्दिनी सदा ॥

ஜலாந்தகேலி காரிசாரு ராதிகாங்க ராகிணீ
ஸ்வபர்து ரன்ய துர்லபாங்கதாம் கதாம்சபாகினீ!
ஸ்வதத்தஸ௱ப்த ஸப்தஸிந்து பேதனாதி கோவிதா
துநோது நோமனோமலம் கலிந்த நந்தினீ ஸதா!!

ஜலக்ரீடை செய்யும் ராதிகாதேவியின் உடற்பூச்சுக் கரைசலைக் கொண்டு யமுனை விளங்குகிறது. தனது பர்தாவானஸமுத்ரராஜனின் (கண்ணனின்) மடியையடைதல் மற்றவருக்கு எளிதல்லவெனினும் யமுனையடைந்துள்ளது. தன் கிளை நதிகளாகிய ஸப்தஸிந்துக்களினின்று தனித்துமிருக்கிற யமுனை நமது மனவழுக்கை களையட்டும்.

(7)

जलच्युताच्युताङ्गरागलम्पटालिशालिनी
विलोलराधिकाकचान्तचम्पकालिमालिनी।
सदावगाहनावतीर्णभर्तृभृत्यनारदा
धुनोतु मनोमलं कलिन्दनन्दिनी सदा॥

ஜலச்யுதாச்யுதாங்கராக லம்படாலி சாலினீ
விலோல ராதிகா கசாந்த சம்பகாலி மாலினீ!
ஸ்தாவகாஹனா வதீர்ண பர்த்ரு ப்ருத்ய நாரதா
துநோது நோ மனோமலம் கலிந்த நந்தினீ ஸதா!!

ஜலத்தில் கரைந்த கண்ணனின் உடற்பூச்சு மேல் சுற்றி வட்டமிடும் வண்டுகள் ஒரு பக்கம், மற்றொரு பக்கம் ராதையின் தலை முடியனுள் அவிழ்ந்து வீழ்ந்த சம்பகத்தை நாடிவரும் வண்டுகள் கூட்டம். நாரதர் போன்றோர் ஸ்நானம் செய்ய இறங்கி வரும் இடம் - இப்படி மிளிரும் யமுனை நமது மனவழுக்கை நீக்கட்டும்.

(8)

सदैव नन्दनन्दकेलिशालिकुञ्जमञ्जुला
तटोत्थफुल्लमल्लिकाकदम्बरेणुसूज्वला ।
जलावगाहिनां नृणां भवाब्धिसिन्धुपारदा
धुनोतु मनोमलं कलिन्दनन्दिनी सदा ॥

ஸதைவ நந்த நந்த கேலி சாலி குஞ்ஜ மஞ்ஜுலா
தடோத்த புல்ல மல்லிகா கதம்பரேணு ஸூஜ்வலா!
ஜலாவகாஹினாம் ந்ருணாம் பவாப்திஸிந்து பாரதா
துநோது நோ மனோமலம் கலிந்த நந்தினீ ஸதா!!

நந்தகுமாரன் விளையாடி குதூஹலிக்கும் அழகிய பூந்தோட்டங்கள் ஒருபுறம், கரையோரங்களில் பூத்துக்குலுங்கும் மல்லிகை, கதம்பம் இவற்றின் மகரந்தத்தூள்கள் பரவும் இடங்கள் மறுபுறம். இன்னும் யமுனையில் நீராடிய மக்களின் ஸம்ஸார வாழ்க்கையை கடத்தி வைக்கும் பாங்கு இவற்றுடன் மிளிரும் யமுனை நமது மனவழுக்கை நீக்கட்டும்.

யமுனாஷ்டகம் முற்றிற்று

